REGD. No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 4 பக்கம் விலை 35 காசு

அமைதி

அமைதியிலே இரண்டுவகைஉண்டு. ஒன்று விவரம் தெரியாமலிருக்கிற அமைதி. இன்னொன்று எல்லா விவரங்களையும் தெரிந்திருக்கும் அமைதி.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

சமத்துவம்

மக்களிடையே மென்மேலும் சமத்துவம் பரவுவதற்கேற்ற வகையில் நமது சட்டங்கள் வகுக்கப்பட வேண்டும்.

-பண்டித நேரு

மலர் 4 சென்னை 14-7-1980 திங்கள் (★) ❋ ● ❋ (★) வெளியீடு 15—7—1980 செவ்வாய் இதழ் 246

## தமிழக விவசாயிகள் பயன் பெற

# ரூ. 145 கோடி புதிய கடன்

## கழக அரசு வழங்குகிறது

சென்னை, ஜூலை 14-தமிழக விவசாயிகள் பயன் பெற, அவர்களுக்கு 145 கோடி ரூபாய் புதிய கடன் வழங்க புரட்சித்தலைவரின் கழக அரசு முடிவெடுத்துள்ளது. விவசாயிகள் நலத்தை அடிப்படையாகக் கொண்ட வேறு பல நடவடிக்கைகளும் எடுக்கப்பட இருக்கின்றன.

கிராமப்புற மற்றும் நலிந்த மக்களின் மேம்பாட்டுக்காக கூட்டுறவு அமைப்புக்களின் மூலம் இந்த ஆண்டு மேற்கொள்ள இருக்கும் திட்டங்களை அமைச்சர் பொன்னையன் இன்று சட்டப்பேரவையில் அறிவித்தார்.

அதன் விவரம் வருமாறு:

1980-81-ம் ஆண்டிற்கு பயிர்கடனுக்கு குறுகிய கால கடனாக 120 கோடி ரூபாய் மத்திய கூட்டுறவு வங்கிகள் மூலம் வழங்க திட்டமிடப்பட்டுள்ளது.

கறவை மாடுகள், உழவு மாடுகள், மாட்டு வண்டிகள் வாங்குதல் ஆடு வளர்த்தல், கோழி வளர்த்தல் போன்றவற்றிற்கும் மத்திய கால கடனாக ரூ. 12 கோடி மத்திய கூட்டுறவு வங்கிகள் மூலம் வழங்க திட்டமிடப்பட்டுள்ளது.

தென்னை. முந்திரி, திராட்சை, மா, காப்பி போன்றவற்றின் உற்பத்தி பெருக்கத்திற்கும், பட்டுப்பூச்சி வளர்த்தல், கோழிப்பண்ணை அமைத்தல் கறவை மாடுகள், மீன் பிடித்தல், கிணறு வெட்டுதல் போன்றவற்றிற்கும் நீண்டகால கடனாக நில வள வங்கிகள்மூலம்ரூபாய் 13கோடி வழங்க திட்டமிடப்பட்டுள்ளது.

நலிந்த பிரிவினருக்கு அசையா சொத்து ஈடு இல்லாமலேயே நிலவள வங்கி மூலம் திட்டமிடப்பட்டுள்ளது.

### பயிர் காப்புறுதி திட்டம்

சென்ற ஆண்டு பொது காப்பீட்டுக் கழகத்தின் நிதிஉதவியோடு 17 வட்டங்களில் பயிர் காப்புறுதி திட்டத்தைக் கொண்டு வந்த இந்த அரசு 20வது வட்டங்களிலுள்ள 17 ஆயிரம் ஏக்கர் நிலத்தில் முதல் மற்றும் இரண்டாம் போக நெல் சாகுப்படிக்கு ஒரு கோடி ரூபாய் அளவிற்கு பயிர் காப்புறுதி திட்டத்தை இந்த ஆண்டு நடைமுறைப்படுத்தி உள்ளது.

79-80 ஆண்டில் 111.42 கோடி ரூபாய் நலிந்த பிரிவினருக்கு நகை கடன் வழங்கப்பட்டுள்ளது. இத்திட்டம் இன்னும் பரவலாக இந்த ஆண்டு விரிவாக்கப்படும்.

பினாமி கடன் வழங்குதல் மற்றும் பிற ஒழுங்கீனங்களை தடுக்கும் பொருட்டு உறுப்பினர்களுக்கு பாஸ் புத்தகம் வழங்குகிற முறையும், பயிர் கடனில் பணப்பகுதியை நேரில் ரொக்கமாக வழங்குவதற்கு பதிலாக உறுப்பினர்களின் சேமிப்புகணக்கில் வரவு வைக்கிற முறையும் உடனே நடைமுறைக்கு கொண்டு வரப்படும்.

கிராமத்து நகரத்து நலிந்த பிரிவினரும் வேலையில்லாதிருக்கும் படித்த இளைஞர்களும்சுயதொழில்

(2-ம் பக்கம் பார்க்க)

தி.மு.க.விலிருந்து விலகி நேற்று நாவலர் முன்னிலையில் கழகத்தில் சேர்ந்தவர்களில் ஒரு பகுதியினர்.

இன்று நடக்கிறது

## முதல்வர் பங்கேற்கும் கவியரசு பிறந்த தினம்

சென்னை, ஜூலை 14-அரசவைக் கவிஞர் கண்ணதாசனின் 54வது பிறந்தநாள் விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் தலைமை ஏற்று பாராட்டுகிறார். இன்று மாலை மியூசிக்அகாடமியில் இந்த விழா நடக்கிறது.

(5-ம் பத்தி தொடர்ச்சி)

சட்டம் தான்" என்று கூறியிருந்தார். இச்சட்டம் பற்றி எதிர்கட்சித்தலைவர் கருணாநிதி என்ன கருதுகிறார், பேராசிரியர் என்ன கருதுகிறார் என்றெல்லாம் அறிய விரும்புகிறேன்.

கிருஷ்ணமூர்த்தி(திமுக): இச்சட்ட முன்வடிவு பற்றி கருணாநிதியின் கருத்து என்ன, பேராசிரியர் கருத்து என்ன என்று அமைச்சர் கேட்கிறார், எங்கள் எல்லோருடைய கருத்தும் ஒன்று தான், நான் கேட்பதெல்லாம் 20 வருடங்களுக்குப்பின்பு இப்போது கொண்டு வருவானேன்?

எஸ்.டி.எஸ்: 20வருடங்களுக்குப்பிறகுதானே புரட்சித்தலைவர் ஆட்சி அமைந்திருக்கிறது

## பினாமி நிலங்களைக் கைப்பற்ற

# கருணாநிதி கட்சி எதிர்ப்பு

## நிலப் பிரபுக்களுக்கு வக்காலத்து

சென்னை, ஜூலை 14-நிலப்பிரபுகளிடமிருந்து பினாமி நிலங்களைக் கைப்பற்ற வகை செய்யும் நிலச்சீர்திருத்தச்சட்டமுன் வடிவுக்கு சட்டசபையில் திமுக எதிர்ப்புத்தெரிவித்தது. முற்போக்கான இந்தநடவடிக்கையைஎதிர்த்ததன் மூலம் ஏழை விவசாயிகளுக்கு துரோகியாகவும், நிலப்பிரபுக்களுக்கு விசுவாசியாகவும் திமுக தன்னை அடையாளம் காட்டிக்கொண்டது.

இன்றுதமிழகசட்டசபையில் தமிழக நிலச்சீர்திருத்தங்கள் (நிலத்துக்கு உச்சவரம்பு கட்டுதல்) இரண்டாவது திருத்த சட்டமுன்வடிவை சட்டசபையில் தாக்கல் செய்வதற்கு வருவாய்த்துறை அமைச்சர் எஸ்.டி.எஸ். அனுமதி கோரினார்.

திமுக உறுப்பினர் வி கிருஷ்ணமூர்த்தி உடனடியாக எழுந்து, இச்சட்ட முன்வடிவை சபையில் அனுமதிக்கக்கூடாது என்றுகுறிப்பிட்டார். "இச்சட்ட முன்வடிவை சபையில் தாக்கல் செய்வதற்கு எனது எதிர்ப்பைத் தெரிவிக்கிறேன். இதனால் நிலத்தை அனுபவித்து வரும் பலருக்கு இடையூறுகள் ஏற்படும். ஆகவே இந்தச் சட்ட முன்வடிவை சபையில் தாக்கல் செய்யக்கூடாது" என்று அவர் கூறினார்.

மார்க்சிஸ்ட் உறுப்பினர் ரமணிஎழுந்து, அமைச்சர் இந்த சட்டமுன் வடிவைத் தாக்கல் செய்த பிறகு உறுப்பினர் எப்படி அதற்கு எதிர்ப்புதெரிவிக்கமுடியும் என்று கேட்டார்.

அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் எழுந்து, வருவாய்த்துறை அமைச்சர் சட்ட முன்வடிவை தாக்கல் செய்வதற்கான அனுமதியைத் தான் கோரியிருக்கிறார். ஆகவே இன்னும அமைச்சர் சட்டமுன் வடிவைத் தாக்கல் செய்யவில்லை எனக் குறிப்பிட்டார்.

பின்னர் சபாநாயகர், அமைச்சர் சட்ட முன் வடிவைத் தாக்கல் செய்ய அனுமதி கோருவதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கப்படுமானால் அடுத்த நடவடிக்கைகளைப்பற்றி சபை விதிகளில் உள்ளதைப் படித்துக்காட்டினார்.

அதன் பிறகு இந்தச் சட்ட முன்வடிவை தாக்கல் செய்யலாமா என்பது குறித்து சபாநாயகர் சபையின் முடிவைக் கேட்டறிந்தார்.

### ஆதரவே அதிகம்

சட்ட முன்வடிவைத் தாக்கல் செய்ய ஆளும் கட்சியினர் ஆதரவு தெரிவித்தும், தி.மு.க. தரப்பில் எதிர்ப்புத் தெரிவித்தும் உறுப்பினர்கள் குரல் எழுப்பினர்.

இதை அடுத்துசபாநாயகர் சட்ட முன்வடிவை தாக்கல்செய்ய ஏற்போரே அதிகம் இருப்பதாக அறிவித்து வருவாய்த்துறை அமைச்சர் எஸ் டி எஸ் சட்ட முன்வடிவை தாக்கல் செய்ய அனுமதித்தார் அமைச்சரும் தாக்கல் செய்தார்.

அப்போது எஸ் டி எஸ் பேசுகையில் சட்ட முன்வடிவைத் தாக்கல் செய்வதற்கே உறுப்பினர் எதிர்ப்புத் தெரிவித்தால் அதற்கு சம்பந்தப்பட்ட அமைச்சர் பதில் கூற சபாநாயகர் அனுமதிக்கவேண்டும் என்று குறிப்பிட்டார். விதிகளில் அவ்வாறுஇல்லை விவாதத்துக்குப் பிறகு இதுகுறித்துத் தாங்கள் தெரிவிக்கலாம் என்றுசபாநாயகர் கூறினார்.

தமிழ்நாடு நிலச்சீர்திருத்தங்கள் இரண்டாவது திருத்தச் சட்டத்தின் முன்வடிவு விவரம் வருமாறு:-

"தமிழ்நாடு 1961-ஆம் ஆண்டு நிலச்சீர்திருத்தங்கள் சட்டம் (தமிழ்நாடு சட்டம் 58[1961) செயலுக்கு வரும் நாளுக்கு அதாவது 6-4-1961க்கு முன்னரும் 1.1. 1958க்குப் பின்னரும்பல நிலங்களின் உரிமைகள் மாற்றப்பட்டன என்றும் இதனால் மேற்படி சட்டத்தின்படி அரசு எடுக்க உபரி நிலங்களின அளவு குறைந்துவிட்டன என்றும் அரசின் கவனத்துக்கு கொண்டு வரப்பட்டுள்ளது.

எனவே ஒருவர் வைத்திருந்த நிலம் எந்த ஒரு நபருக்கு (பொறுப்புக் கழகம் உட்பட) விற்பனை, தானம் உரிமையை ஒப்புவித்தல் இறுதி ஆவணம் எழுதிவைத்தல் அல்லது எந்த ஒருமுறையினாலும் மாற்றப்பட்டிருந்தால் அத்தகைய மாற்றம் செல்லாதது என ... அக்கையிலே மேற்கண்ட சட்டத்தைத் திருத்த சட்டம் ஒன்றை இயற்ற அரசு முடிவு செய்துள்ளது.

இவ்வாறு அந்த சட்டத்தில் கூறப்பட்டுள்ளது.

### கருணாநிதி நிலை என்ன? எஸ். டி. எஸ். கேள்வி

நில சீர்த்திருத்தசட்டமுன் வடிவை திமுக உறுப்பினர் எதிர்க்கிறார் இச்சட்டத்தில் கருணாநிதியின் நிலைஎன்ன? என்று அமைச்சர் எஸ் டி எஸ் சட்டசபையில் கேட்டார்.

சட்டசபையில் இன்று மான்யக் கோரிக்கை மீது தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் கட்சி உறுப்பினர் ஏ. எஸ். பொன்னம்மாள் பேசும் போது தமிழக அரசு கொண்டுவர உத்தேசித்துள்ள நில உச்சவரம்பு சட்டத்தை விரைவில் நிறைவேற்ற வேண்டும்மென கேட்டுக் கொண்டார்.

அமைச்சர் எஸ். டி எஸ்: இன்று காலை இச்சட்ட முன்வடிவை தாக்கல் செய்ய முற்பட்ட பொழுது சட்ட முன்வடிவை தாக்கல் செய்வதற்கே எதிர்க்கட்சியினர் ஆட்சேபம் தெரிவித்தனர்

அம்பிகாபதி (கம்யூனிஸ்ட்): அமைச்சர். எதிர்கட்சியினர் என மொத்தமாக குறிப்பிடுகிறார். எதிர்கட்சி வரிசையில் நாங்கள் எல்லோரும் இருக்கிறோம். ஆகவே அமைச்சர் எந்தஎதிர்கட்சி எதிர்த்தது என குறிப்பிட்டு கூறுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

எஸ். டி, எஸ்.: தி. மு. க, உறுப்பினர் கிருஷ்ணமூர்த்தி தான் எதிர்ப்பு தெரிவித்தார்.

எங்களுடைய எண்ணமெல்லாம் இச்சட்டத்தை தாமதப்படுத்தக்கூடாது என்பதுதான் என்பதை அரசின் சார்பில் தெரிவித்துக்கொள்கிறேன்

நீண்ட காலமாக மக்கள்எதிர்பார்த்த சட்ட முன்வடிவை கொண்டு வந்துள்ளோம்.

உறுப்பினர் களெல்லாம் மக்களின் கருத்துகளை அறிந்து சொல்லவேண்டும் உச்சவரம்பு சட்டத்தை அண்ணா அவர்கள் "உச்சவரம்பு சட்டமல்ல, மிச்சவரம்பு

(1-ம் பத்தி பார்க்க)

## திண்டாட்டமா? உமக்கா? ஊஹூம்!

நான் ஒன்றும் கார் இல்லாமல் திண்டாடவில்லை.

-நிருபர்களிடம் கருணாநிதி

யார் சொன்னது அப்படி?

இன்று இவருக்கு இருக்கும் இத்தனை வசதிகள் இன்னும் இருபது தலைமுறைகளுக்கு வரும்.

அந்த அளவுக்கு ஏழாண்டுகால ஆட்சியில் 'சேர்த்து' வைத்திருக்கிறாரே!

மக்களின் பணத்தை மாளிகைகளாக்கிக் கொண்டவர்களுக்கு - பலமாடிக் கட்டிடங்களாக மாற்றிக்கொண்டவர்களுக்கு - பவுன் வெள்ளி நகைகளாக ஆக்கிக் கொண்டவர்களுக்கு 'கார் பஞ்சம்' என்று யாராவது சொல்வார்களா? சொன்னால்தான் நம்புவார்களா?

# கருணாநிதி தேர்தலை எதிர்த்து ஹண்டே வழக்கு தாக்கல்

சென்னை, ஜூலை 14-அண்ணா நகர் தொகுதியிலிருந்து கருணாநிதி தேர்ந்தெடுக்கப்பட்டது செல்லாது, நான் தேர்ந்தெடுக்கப்பட்டதாக அறிவிக்கவேண்டும் என்று கோரி உயர்நீதி மன்றத்தில் டாக்டர் ஹண்டே இன்று மனுதாக்கல் செய்தார்.

இந்த வழக்கில் கருணாநிதி மற்றும் அங்கு போட்டியிட்ட வேட்பாளர்கள், தொகுதி தேர்தல் அதிகாரி ஆகியோர் சேர்க்கப்பட்டனர்.

பதிவான வாக்குகளை பரிசீலித்து மீண்டும் எண்ணவேண்டும். கருணாநிதி வெற்றிபெற்றதை செல்லாது என்று அறிவிக்க வேண்டும் ஹண்டே வெற்றி பெற்றதாக அறிவிக்க வேண்டும் என்று வழக்கில் கோரப்பட்டுள்ளது.

வழக்கில்கூறப்பட்டுள்ள விவரம் வருமாறு:-

அண்ணாநகர் தொகுதியில் போட்டியிட்ட கருணாநிதி தேர்தல் பிரச்சாரத்தை துவங்கும் முன்பே வன்முறை துவங்கப்பட்டு விட்டது.

அவர் மனுதாக்கல் செய்தவுடன் தி. மு. க. வினர் தமிழகத்தின் பல் வேறு பகுதிகளிலிருந்து அண்ணாநகர் தொகுதியில்தேர்தல் பணிக்காக குவியத் துவங்கினர்.

### வன்முறை

தேர்தல் சமயத்தில் கருணாநிதியும் அவரது தேர்தல் ஏஜண்டுகள் தூண்டுதல் பேரில் வன்முறை தூண்டப்பட்டு வாக்காளர்கள் மிரட்டப்பட்டனர்.

இது குறித்து தேர்தல் அதிகாரிகள் போலீஸ் அதிகாரிகள் கவனத்திற்கு கொண்டு வரப்பட்டது.

தேர்தல் சமயத்தில் பல கட்டடங்களில் முறைகேடுகள் நடந்துள்ளன.

பல திமுக கூட்டங்களில் முறைகேடாக பேசியிருக்கிறார்கள்.

ஹண்டே தமிழரல்ல; கருணாநிதி தமிழர் என்று பேசியிருக்கிறார்கள்.

மே 15ந் தேதி முதலே அனைத்திந்திய அண்ணா திமுக தொண்டர்களை தாக்கத் தொடங்கினார்கள்.

வன்முறை சம்பவங்கள் நடந்துள்ளன. இதுகுறித்து 20-ம் தேதி தலைமை தேர்தல் அதிகாரிக்கு புகார் எழுதி அனுப்பப்பட்டது.

மிரட்டல்பற்றி போலீஸ் துணை கமிஷனருக்கும் தெரிவிக்கப்பட்டது.

ஹண்டேவுக்கு ஆதரவாக இருந்த பலபகுதி வாக்காளர்களை தி. மு. க. வினர் தாக்கினார்கள். இதுபற்றி தேர்தல் அதிகாரி ஓசாவிடம் புகார் தரப்பட்டது.

ஆனாலும் வாக்காளர்களுக்கு பாதுகாப்பு கிடைக்கவில்லை இந்த சம்பவங்களுக்கு பிறகு பெண்கள் ஓட்டுப்போட வெளியே வர பயந்தனர்.

இதுகுறித்து 4 புகார்கள் போலீசிடம் கொடுக்கப்பட்டுள்ளன

வாக்குப்பதிவு அன்று கருணாநிதி அனுமதியற்ற நபர்களுடனும் திமுக தொண்டர்களுடனும் வாக்கு சாவடிக்குச்

(2-ம் பக்கம் பார்க்க)

(5ம் பத்தி தொடர்ச்சி)
50 வைக்கப்பட்டன. இதற்கு 50 ஆயிரம் செலவாகி இருக்கும்,

டெலிபோன் பில் 10 ஆயிரம் ஆகியிருக்கும்.

இலவசமாக ரூ 15 ஆயிரம் மருந்துகள் விநியோகம் செய்திருக்கிறார்கள்

75 பொதுக் கூட்டங்கள் நடத்தி இருக்கிறார்கள் இதற்கு 50 ஆயிரம் செலவாகி இருக்கும்

## செல்லாத ஓட்டுகள்

சந்தேகத்திற்குரியஓட்டுகள் எண்ணப்பட்டபோது கருணாநிதியின் ஓட்டுகளோடு செல்லாத ஓட்டுகள் சேர்க்கப்பட்டன.

ஹண்டேவுக்குகிடைத்த ஓட்டுகளும், கருணாநிதிக்கு சேர்க்கப்பட்டன.

ஓட்டு எண்ணிக்கை நடந்த அன்றுஇரவு 11-40 மணிக்கு ஓட்டுக்களை திரும்ப எண்ணவேண்டும் என்ற கோரிக்கை மறுக்கப்பட்டது.

ஆகவே இத்தகைய காரணங்களால் கருணாநிதி வெற்றி பெற்றது செல்லாது என்றும் ஹண்டே வெற்றி பெற்றதாகவும் அறிவிக்க வேண்டும்.

இவ்வாறு வழக்கில் கூறப்பட்டுள்ளது. டாக்டர் ஹண்டே சார்பில் இந்த வழக்கில் வழக்கறிஞர்கள் கே கே வேணுகோபால், கே சுப்ரமணியம், பாஸ்கர சங்கர் ஆகியோர் ஆஜரானார்கள்.

(3-ம் பத்தி தொடர்ச்சி)
யும் நண்பர்களையும் பெறுவதில்லை.

படிக்கபள்ளிக்குபோகும் போது தான் கோபம் விரோதம் ஆகியவைகளுக்கு ஆளாகிறோம் நல்லவர்களாக பெரியவர்கள் வளர்க்கவேண்டும்.

மணமக்களுக்கு நான் சொல்லிக் கொள்கிறேன் நல்ல நண்பர்களைத் தேர்ந்தெடுங்கள். அவர்கள் நமக்கு நல்லயோசனை சொல்பவர்களாக இருக்கவேண்டும். தவறு கண்ட இடத்தில் நம்மை கண்டிப்பவர்களாக இருக்க வேண்டும். நாம் எது செய்தாலும் ஆதரிப்பவர்களாக இருக்கக்கூடாது.

நல்ல நண்பர்களை மணமக்கள் தேர்ந்தெடுக்க வேண்டும்.

ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு நடக்கவேண்டும் ஒருவருக்கொருவர் ஒளிவு மறைவு இருக்கக் கூடாது சிறு விஷயமாக இருந்தாலும் மறைத்து வைக்கும் நிலை ஆணுக்கும் பெண்ணுக்கும் கூடாது அது தெரிந்து விட்டால் சந்தேகம் ஏற்படும்

மூன்றாவது ஆள் மத்தியஸ்தர்களாக இருக்கக் கூடாது அவர்கள் நியாயம் சொல்வது துரோகத்திற்கு வழி செய்வதாக அமைந்து விடும், கணவன் மனைவி வாழ்க்கையில் இடைப்பதை அவர்களுக்குள்ளேயே பேசித் தீர்த்துக் கொள்ள வேண்டும்,

அப்படி இருந்தால் எத்தனை சிறப்பு பெற வேண்டுமோ அத்தனை சிறப்பையும் பெறலாம் இப்படி அல்லவா இருக்கவேண்டும் என்று மற்றவர்கள் சொல்ல தக்க வகையில் நடந்து கொள்ளவேண்டும் என்று கூறி என் தாயின் ஆசி என்றென்றும் மணமக்களுக்கு கிடைக்கவேண்டும் என்றுவேண்டுகிறேன்

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் கூறினார்

'பிரச்னைகளைத்தீர்ப்பதற்காக துரோகிகட்கு இடம் தராதீர்'

# மணமக்களுக்கு புரட்சித்தலைவர் தந்த அறிவுரை

சென்னை, ஜுலை. 14- உங்களுக்குள் உள்ள பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கு மூன்றாவது நபரைஅழைத்தால் அது துரோகத்துக்கு இடம் தந்ததாகிவிடும் என்று மணமக்களுக்கு புரட்சித்தலைவர் அறிவுரை வழங்கினார்.

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் தலைமை ஏற்று மூன்று திருமணங்களை நடத்தி வைத்தார்.

தியாகராயநகர் எல் ஆர் சுவாமி திருமணமண்டபத்தில்நேற்று காலை 10-30 மணிக்கு சிவநேசன் காயத்ரி திருமணத்தையும், வாணி மகால் அருகேயுள்ள ஆனந்தவல்லி திருமண மண்டபத்தில் 122வதுவட்ட அமைப்பாளர் மன்னன் மகன் மணியனுக்கும் கீழ்சாத்த மங்கலம மாணிக்கம் மகள் சத்தியவாணிக்கும் திருமணத்தைகாலை11மணிக்கும் நடத்தி வைத்தார் மணவிழாக்களில் அமைச்சர்கள் கே ஏ கே டாக்டர் எச் வி ஹண்டே கலந்து கொண்டனர்.

சென்னை தங்கசாலை தெருவில் முத்து குமாரசாமி திருமண மண்டபத்தில் காலை 11-45 மணிக்கு ஸ்டண்ட் பார்டி வி பி. சாமி முதலியார் மகன் மதனுக்கும் புளியாந்தோப்பு எம். பாலு மகள் மணிமேகலைக்கும் திருமணத்தை முதல்வர் புரட்சித்தலைவர் நடத்தி வைத்தார்.

மணவிழாவில் அமைச்சர்கள் கே ஏ கே, எம் ஜி ஆர் மன்றம் தி நகர் மூர்த்தி, பசுபதி, சத்யா அரி, பூக்கடை நடராசன் என் சங்கா, கே எஸ் மாதவன், சிவசுப்பிரமணியன், ஜெபமணி, என் பி சாரதி, ராமகிருஷ்ணன் ஆகியோர் கலந்துகொண்டனர்,

மணவிழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசும் போது கூறியதாவது:

## சீர்திருத்தம், சிக்கனம்

இந்த திருமணத்தை சிக்கனமாகவும் சீர்திருத்தமாகவும் எல்லோரும் கண்டு மகிழும்படியும இவ்வளவு சிறப்பாக நடைபெறுகிறதே என்று சிலர் ஏக்கம் கொள்ளும வகையிலும் நடத்தியிருப்பது பாராட்டுக்குரியது.

உடலைப் பேணிக் காத்து சம்பாதித்த பணத்தை பெருமைக்காக செலவழிப்பது தேவையற்றது என்பதை உணர்ந்துசீர்திருத்த திருமணமாக நடத்தி வருகிறோம்.

மதன் - மணிமேகலை தம்பதிகளுக்கு நீங்களும் நானும ஆசி வழங்கியிருக்கிறோம்.

மணமகனை பற்றி பேசும் போது சாமியை பற்றி பேசியாக வேண்டும் சாமி உழைத்து சம்பாதிப்பவர் சாமி என்று பெயர்தான் தன் தவிர உழைப்புக்கு சொந்தக்காரர்.

மணமகன் ஒருதொழிலை தனக்கு சொந்தமாக்கிக் கொண்டு வளமோடும் செழிப்போடும் வாழ்க்கையை நடத்தவேண்டும்.

மற்றவர்கள் நம்மை வாழ்த்தவேண்டும் என்பதற்காக நாம் பெரிய

பணக்காரர் போல குடும்பத்தை ஆடம்பரமாக நடத்தவேண்டும் என்று நடந்தால் நம்மை யாரும் அணுகமாட்டார்கள்.

## பாசம் பண்பு

பாசத்தோடு பண்போடு நல்லவர்களாக நடந்து கொண்டால் எத்தனையோ நண்பர்களை நாம் பெறலாம் முகத்தைபார்க்கும் போது புகழ்ந்து கொண்டிருப்பவர்கள் பின்னால் நம்மை தூற்றுவார்கள் அது வெறும் முகஸ்துதி செய்பவர்கள் நட்பாக இருக்க முடியும்.

தவறு கண்ட இடத்தில் நம்மை கண்டிப்பவர்களாக இருந்தால் தான் நாம் பெற்றவர்கள் நல்ல நண்பர்களாக இருக்க முடியும்.

பெரியவர்கள் சொல்லுவார்கள் சகவாசதோஷம் என்று அது போல நம்முடன் இருப்பவர்கள்.

தீயபழக்கம்கொண்டவர்களாக இருந்தால் போகப் போக அது நம்மையும் பிடித்துக்கொள்ளும்.

மணமக்கள் மிகஎச்சரிக்கையாக இருக்கவேண்டும்.

''நல்லாரை காண்பதும் நன்றே நலமிக்க நல்லார் சொல் கேட்பதும் நன்றே நல்லாருடன் இணங்கி இருத்தலும் நன்றே'' என்று சொல்வார்கள் அப்படிப் பட்டவர்களுடன் பழக வேண்டும்

## கோபம், விரோதம்

ஒவ்வொருவரும் பிறந்த வுடனேயே விரோதிகளை

(1-ஆம் பத்தி பார்க்க)

## ஹண்டே வழக்கு

(முதல் பக்க தொடர்ச்சி)
சென்றார்.

அவருடன் டாக்டர் கலாநிதி, வீராசாமி, ஆகியோர் வாக்குச் சாவடிக்குள் சென்று ஹண்டே ஏஜெண்டுகளை மிரட்டினார்கள் கூடவந்தவர்கள் வாக்குச்சாவடிக்கு முன்னால் ஓட்டுப்போட நின்ற வாக்காளர்களிடம் கருணாநிதிக்கு ஓட்டுபோடுமாறு கேட்டனர்.

ஒரு வாக்குச் சாவடிக்கு கருணாநிதி சென்றபோது அங்கிருந்த தேர்தல் அதிகாரியின் பெயர் வேலை விவரங்களை கேட்டார்.

பிளவர்ஸ் ரோட்டிலுள்ள ஒருவாக்குச்சாவடிக்குள் உதயசூரியன் சின்னம் பொறித்த துண்டுப்பிரசுரங்களை மு க ஸ்டாலின் வீசினார்.

பி எப் ஆபீஸ் பணியாளர் மணி என்பவர் கத்தியுடன் நின்று வாக்காளர்களை மிரட்டினார். இதனால் சுதந்திரமாக வாக்களிக்கும்நிலை இல்லை. வாக்களிப்பதும் நிறுத்தப்படவில்லை.

எம். சி. டி. பள்ளி வாக்குச்சாவடிக்குள் அன்பழகன் மைத்துனர் சுப்பையா பெண்வாக்காளர்களை மிரட்டினார்.

12ம் எண் வாக்குச் சாவடியில் மை வைக்கும் அதிகாரி ஒருவர் கருணாநிதிக்கு ஆதரவாக ஓட்டு கேட்டார்,

## கள்ள ஓட்டு

ரிசர்வ வங்கி காலனி ஓட்டு சாவடியில் நிறையக் கள்ளஓட்டுக்கள் போடப்பட்டன.

ஹண்டேயின் தேர்தல் ஏஜெண்டு தெரிவித்த ஆட்சேபத்தின் பேரில் சிலர் திருப்பி அனுப்பப்பட்டனர். அந்த இடத்திற்கு கலாநிதியும், வீராசாமியும் வந்து அதிகாரிகளை மிரட்டினார்கள்.

எங்கள் அரசு வரட்டும் காலை ஒடிக்கிறோம் என்று ஹண்டே ஏஜெண்டுளிடம் சத்தம்போட்டனர் இரட்டை இலைக்கு ஓட்டு போட்டோம் என்று சிலர் சொன்னதால் மெர்சிஹோம் மீது கல் வீசினார்கள்

இதனால் பயந்து அங்கிருப்பவர்கள் ஓட்டுபோட

முடியவில்லை

அப்பாசாமி முதலிதெருவில் சோடா பாட்டில் வீசப்பட்டதால் வரிசையில்நின்றிருந்தவாக்காளர்கள் பயந்து ஓடிவிட்டனர்

வாகுப்பதிவு துவங்குவதற்கு முன்பு அழகப்பநகர் குடிசை பகுதியில் கலாநிதியும் ஆற்காடு வீராசாமியும் வாக்காளர்களை மிரட்டியதால் பயந்து ஒருவர்கூட வாக்களிக்க முடியவில்லை

மூங்கப்பள்ளம் வாக்குச் சாவடி அருகே ஹண்டேயின் கார் தாக்கப்பட்டது. காரின் கண்ணாடிகள் உடைக்கப்பட்டன. ஹண்டேயும் தாக்கப்பட்டார்.

இதனால் ஒருமணிநேரம் அங்கு வாக்குப்பதிவு நிறுத்தப்பட்டது.

ஹண்டேவுக்கு ஆதரவாக வாக்களிக்க வந்தவர்கள் ஓட்டுப்போட முடியவில்லை.

தேர்தல் செலவு 10 ஆயிரத்து 125ரூபாய் 75காசு ஆகியிருப்பதாக கணக்கு கொடுத்திருக்கிறார்.

ஆனால் கருணாநிதி கையால் எழுதப்பட்டது போன்ற துண்டு பிரசுரங்கள் ஒருலட்சத்து 66ஆயிரம் அடிக்கப்பட்டிருக்கின்றன.

இதற்கு 66 ஆயிரத்து 500ரூ செலவாகி இருக்கிறது.

அலங்கார பேனர்கள்

(1-ம் பத்தி பார்க்க)

# ரூ. 145 கோடி புதிய கடன்... (1-ம் பக்க தொடர்ச்சி)

துவக்க உதவுகின்ற வகையில் தோல் பொருள் தயாரித்தல், கைகுத்தல் அரிசிதயாரித்தல், ரொட்டி தயாரித்தல், எண்ணை, பனை வெல்லம் நாட்டுச்சர்க்கரை தயாரித்தல், பழங்கள் காய்கறிகளை பதப்படுத்துதல், பட்டுச் பூச்சி, வளர்த்தல், கயிறு தயாரித்தல், போன்ற குடிசை மற்றும் சிறிய தொழில்களுக்கு நகர்ப்புற கூட்டுறவு வங்கிகள் மூலமும் மத்திய கூட்டுறவு வங்கிகள் மூலமும் கடன் வழங்கும் திட்டம் தீவிரப்படுத்தப்படும்.

உரங்கள், விளைபொருட்களை சேமித்துவைப்பதற்கு 200 கிராம கிடங்குகளையும் 5 விற்பனை கிடங்குகளையும் கட்ட திட்டமிடப்பட்டுள்ளது.

உற்பத்தி செய்கிற விவசாயிகளுக்கு நல்ல விலை கிடைக்கவேண்டும் என்ற நோக்கோடும், வாங்கி உண்ணுகின்ற மக்களுக்கு நியாய விலையில் பொருட்கள் கிடைக்கவும் பொருட்களை சேமித்து வைக்க 80-லட்ச ரூபாய் செலவில் 4 குளிர் சாதன சேமிப்பு கிடங்குகள் வேலூர், சென்னை, கோவை, திண்டுக்கல் ஆகிய இடங்களில் ஏற்படுத்தப்படும்.

## நியாய விலைக்கு நடவடிக்கை

விவசாயிகளுக்கு நியாய விலை கிடைக்க தமிழ்நாடு கூட்டுறவுஇணையத்தின் 116 தொடக்க கூட்டுறவு சங்கங்கள் மூலம் நடவடிக்கை மேற்கொள்ளப் பட்டுள்ளது.

கடந்த ஆண்டு 41.15 கோடி ரூபாய்க்கு கொள்முதல் செய்தது நடப்பு ஆண்டில் 50 கோடி ரூபாய்க்கு கொள்முதல் செய்ய திட்டமிடப்பட்டுள்ளது.

75லட்சரூபாய் அளவுக்கு இங்கிலாந்துக்கும் ரூ1.2 கோடி அளவிற்குசைனாவுக்கும் பருத்தி ஏற்றுமதி செய்ய நடவடிக்கைகளை மேற் கொண்டிருக்கிற தமிழ்நாடு கூட்டுறவு விற்பனை இணையம் உறுப்பினர்களிடமிருந்து நல்லவிலைக்கு பருத்தியை கொள்முதல் செய்து கூட்டுறவுத் துறையிலுள்ள 'பஞ்சாக்கம் அமைப்பு' மூலம் பஞ்சு ஆக்கி கூட்டுறவுத் துறையிலுள்ள நூற்பாலைகளுக்கு விற்பனை செய்யும் நடவடிக்கையை மேற்கொள்ளும்.

கால்நடை தீவன உற்பத்தி செய்யும் தொழிற்சாலை ஒன்றை திருவண்ணாமலையில் கூட்டுறவுவிற்பனை இணையத்தின்மூலம் அமைக்க திட்டமிட்டுள்ளது.

## 'தரகு' ஒழிப்பு

இடைத்தரகர்கள் இல்லாமல் நேரடியாக விளை

பொருட்களை கொள்முதல் செய்ய தீவிர நடவடிக்கை மேற்கொள்ளப்படும்,

புதிதாக அமைக்கப்பட்டுள்ள பெரியார் மாவட்டத்திற்கு தனியாக ஒரு மத்திய கூட்டுறவு வங்கி நிறுவ இந்த ஆண்டு நடவடிக்கை மேற்கொள்ளப் படும்.

கூட்டுறவு சங்கங்கள் சட்டத்தில் நல்ல மாற்றங்களை கொண்டு வர ஏற்கனவேசெலக்ட்கமிட்டிக்கு அனுப்பப்பட்ட மசோதா காலாவதியாகி விட்டது.

அந்த ஆலோசனை அடிப்படையில் சில மாற்றங்களுடன் மீண்டும் அம்மசோதாவை நடப்பு கூட்டத் தொடரில் தாக்கல் செய்ய இருக்கிறோம்.

அந்தமசோதா நிறைவேறியயிற்கு எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் கூட்டுறவு அமைப்புகளுக்கு தேர்தல் நடத்துவதற்கு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும்.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் கூறினார்.



ஜுலை 15-ம்தேதி தலைவர் காமராஜ் பிறந்த நாளை தமிழ்நாடு பூராவும் சிறப்பாகக் கொண்டாடும்படி பல தலைவர்கள் நினைவுபடுத்தி இருக்கிறார்கள். இதை அகில இந்தியா முழுவதும் சிறந்த நாளாகக் கொண்டாட வேண்டும் என்பது எங்களுடைய நாட்டுப் பற்றால் தூண்டப்படும் அபிப்பிராயம். இந்தக் கனவு வருங்காலத்தில் நிறைவேறும என்று திடமாக நினைக்கிறோம்,

நாட்டின் சுதந்திரப் போரில் தலைமை தாங்கிய பெரியோர் பலர். அவர்கள் நமக்கு சுதந்திரத்தைப் பெற்றுக் கொடுத்தார்கள். அவர்களுக்கு லட்சக்கணக்கான மக்களும் தோள் கொடுத்தார்கள். அதை இப்பொழுதும் நாம் உணர்கிறோம். எத்தனையோ கோடி மக்கள் ஈடுபட்டாலும் தலைமை வகிப்போர் நாட்டுப் பற்றுடன் நாட்டுமக்களை முழுதும் புரிந்துகொண்டு வழிகாட்டினால்தான் நாடும் முன்னேறும், மக்களும் முன்னேறுவார்கள்.

காந்திமகான் இந்தியாவின் சுதந்திரவிளக்கு: ஆனால் அவர் நாட்டில் இருப்பவர்களை எல்லாம் பூராவாகப் புரிந்துகொள்ளாமல் உழைக்கும் மக்கள் முன்னேற, மற்றவர்கள் அறங்காவலராக இருந்து அவர்களையும் நாட்டையும் முன்னுக்குக் கொண்டு போகவேண்டும் என்று சொல்லிவிட்டு மறைந்தார்.

ஜவஹர்லால் நேரு நமக்குக் கண்ணுக்கு எட்டும் மண்டலங்கள் எல்லாவற்றிலும் நமது புகழ் மேலோங்கும்படி நடந்து, உலகத்தில் இந்தியாவும் ஒரு முக்கியமான நாடு பெரிய நாடு, என்பதைக் காட்டிவிட்டு அவரும் மறைந்தார்.

வல்லபாய் பட்டேல் 90 சதவிகிதத்திற்குமேல் நாட்டு மக்கள் வறுமையால் வாடுகிறார்கள் என்பதை உணர்ந்து, தன்னுடைய நாட்டை நடத்தும் திறமையிலும் பெரும் நம்பிக்கை கொண்டு நாட்டை ஒன்றாக்கி வணிகர்களுக்கும், தொழில் அதிபர்களுக்கும் மத்தியில் நின்று அவர்களை வேண்டியபடி ஒரு கட்டுப்பாடுடன் ஊக்குவித்து நாட்டை முன்னேற்றலாம் என்று ஒரு ஆவல் கொண்டவர். அவருக்கு அந்த நம்பிக்கை இருக்கும் வரையில் அவர் எல்லாவற்றையும் செய்ய முடியும் என்று காட்டினார்.

அகில இந்தியத் தலைவர் காமராஜ் அவர்களுடைய மகிமை தெரியவேண்டும் என்றால் நமக்கு அகில இந்தியத் தொடர்பும், அகில உலக நாட்டு உறவுகளும் இருந்தால்தான் தெரிய முடியும், அறிய முடியும்.

நேரு மறைந்ததும் இந்தியா சின்னாபின்னமாகும் என்று வெளிநாடுகள் எல்லாம் பைனாகுலர் வைத்துப் பார்த்தபோது ''எங்கள் நாடு சீர் குலையாது'' என்று காமராஜ் அவர்கள் தலைமை ஏற்று நாட்டை ஒன்றுபடுத்தி ''என்றும் ஒன்றாக இருப்போம்'' இருக்கிறோம் என்று விளங்கவைத்தார். அவரால்தான் இன்று தென்னாடும், வட நாடும், மேற்கு நாடும், கிழக்கு நாடும் சேர்ந்து ஒரு இந்தியாவாக இருக்கிறது என்பது, அவருடன் நெருங்கி இருந்தவர்களுக்குத்தான் இது முக்கியமாகத் தெரியும். அகில இந்தியாவில் எல்லா இனத்தவரும், எல்லா பிராந்தியங்களில் உள்ளவர்களும் இவரை நன் மதிப்புடன் நினைப்பவர்கள் பல கோடி. ஆகையால் அவருடைய பிறந்த நாள் இன்று கொண்டாடி அவரை நினைக்கும் போது முக்கியமாக இறைவனை வேண்டுவது என்னவென்றால், இந்தப் பிரிவினை வேகங்களை எல்லாம் ஒன்று சேர்த்து சிமிட்டிக்கும் மேலான ஒரு சக்தியைக்கொண்டு கெட்டிப்படுத்தி உயிருடன் உள்ள சக்திபோல் உடையாது அமைக்க அவனுடைய திருவருள் வேண்டும் என்பதுதான்.

# மதுவிலக்குப் பிரச்னை: "தள்ளாடும்" தி.மு.க.

''மதுவிலக்கை தீவிரமாக அமல் படுத்த வேண்டும். மதுவினால் சமுதாயம் அழிந்துவிடக் கூடாது''

-சங்கரலிங்கம் (தி. மு. க)
(மேலவை பேச்சு)

''மதுவிலக்கை ரத்து செய்ய வேண்டும் ஏழை மக்களுக்கு 100 மில்லி சாராயம் 70 காசுக்கு விலைகுறைவாக வழங்கப்பட வேண்டும்.''

-பாபு கோவிந்தராஜ் (தி. மு. க)
(சட்டசபை பேச்சு)

''மதுவிலக்கை பற்றி துவக்கப்பள்ளிகளில் பாடம் போதிக்க வேண்டும். அதனால் மாணவர்களுக்கு சிறுவயதிலேயே மதுவின் மேல் அறுவெறுப்பு உண்டாகும்,''

-அன்பழகன் (தி. மு. க.)
(சட்டசபை பேச்சு)

''மதுகுடிக்க 25 ரூபாய்க்கு பர்மிட் கொடுப்பது பற்றி ஆளுநர் கூட்டிய அனைத்து கட்சி தலைவர்கள் கூட்டத்தில் தி.மு.க. சார்பில் சாதிக்பாட்சா கலந்து கொண்டார். பர்மிட் கொடுக்க சம்மதம் தெரிவித்தார்.''

(செய்தி)

# கோவலன் புதையுண்ட இடத்தில் ஆராய்ச்சி: அரங்கநாயகம் தகவல்

சென்னை, ஜுலை 14- கோவலன் புதையுண்ட இடத்தையும், மாமன்னன் ராஜேந்திரன் அரண்மனையையும் அகழ்வாராய்ச்சி செய்து வருவதாக கல்வி அமைச்சர் அரங்கநாயகம் தெரிவித்தார்.

கல்வி மானிய விவாதத்திற்குப்பதில் அளிக்கையில் கடலில் மறைந்த காவிரிப் பூம்பட்டினம பற்றியும் ஆய்வு நடப்பதாகத் தெரிவித்தார்.

அமைச்சர் அரங்கநாயகம் கூறியதாவது:-

மதுரை நகரில் உள்ள கோவலன் பொட்டலில் அகழ்வாராய்ச்சியில் இரண்டாயிரம் ஆண்டுகட்கு

முன்பு புதைக்கப்பட்ட முதுமக்கள் தாழிகளும், புதைக்குழிகளும் வெளிப்பட்டுள்ளன.

அந்த இடத்தில் தான கோவலன் புதைக்கப்பட்டதாக மக்கள் மரபு குறிக்கிறது. புராதன முக்கியத்துவம் பெற்ற இடமாக இதை அறிவித்துப் பாதுகாக்க நடவடிக்கை எடுக்கப்படும்.

கங்கை கொண்ட சோமபுரம், தொண்டி ஆகிய இடங்களில் அகழ்வாராய்ச்சி செய்யப்பட்டது.

மாமன்னன் ராஜேந்திர சோழனின் அரண்மனையினை முதன்முதலாக கங்கை கொண்ட சோழபுரத்தில் வெளிக்கொணர்ந்துள்ளனர்.

இந்தப் பொருள்களைக் கொண்டு அந்த இடத்திலேயே ஒரு நிலையான வரலாற்றுக் காட்சியகம் வைக்க திட்டமிடப்பட்டுள்ளது.

பூம்புகாரில் ஆழ்கடல் அகழ்வாராய்ச்சி செய்து மறைந்த காவிரிப்பூம் பட்டினச் சிறப்பினை வெளிக்கொண்டுவர உத்தேசிக்கப்பட்டுள்ளது. புலித்தேவர், மருது சகோதரர்கள் ஆகியோரின் நினைவுச் சின்னங்களைபுராதனச் சின்னங்களாகப் பாதுகாத்து தக்க நடவடிக்கை எடுக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

சேப்பாக்கம் தொகுதி

## வட்ட அமைப்பாளர் கூட்டம்

சென்னை, ஜூலை 14-சேப்பாக்கம் தொகுதி வட்ட அமைப்பாளர்கள் ஆலோசனைக் கூட்டம் நாளை 15-ந் தேதி மாலை 6 மணிக்கு திருவல்லிக் கேணி நெடுஞ் சாலையில் உள்ள எண் ஒன்று இல்லக் கட்டிடத்தில் நடக்கிறது என்று தொகுதி அமைப்பாளர் ராஜ்குமார் தெரிவித்துள்ளார்.

(6-ம் பக்கம் தொடர்ச்சி)

பவர்கள் சரி- மற்றவர்கள் தொழிலாளர்கள் போராட்டத்தில் ஈடுபடுவதால் எந்த அளவு பாதிக்கப்படுவார்கள் என்பதைச் சிந்தித்து அனைவரையும் ஒத்துக்கொள்ளச் செய்து போராட்டத்தில் ஈடுபட வேண்டும்.

சொல்ல வேண்டியதை சொல்லவேண்டிய முறைப்படி ஒன்றுபட்டுச் சொன்னால் கட்டாயம் கேட்க வேண்டியவர் கேட்பார்.

மனம்விட்டுப் பேசினால் பயன் ஏற்படும்.

முன்பு ஒரு முறை கச்சா பிலிம் உயர்வு வந்தது அப்போது அண்ணா திமுகவாக இருந்த நேரம் நாங்கள் எதிர்க்கட்சியாக இருந்தோம் அதனை ப்பயன்படுத்திக் கொண்டிருக்கலாம் போராட்டம் நடத்தி இருக்க முடியும் ஆனால் அப்படிச் செய்யவில்லை.

ஏ எல் எஸ் போன்றவர்கள் இருந்தனர். போராட்டம், வேலை நிறுத்தம் என்றால் வேலை செய்பவர்கள் எவ்வளவு காலம் தாங்க முடியும் என்பதை யோசனை செய்யுங்கள் என்று கூறினேன்.

அப்போது கருணாநிதி முதல்வராக இருந்தார். அவரிடம் பேச்சுவார்த்தை நடத்துங்கள் என்றேன்.

நான் கூறியதை ஏற்று போராட்டம் கைவிடப்பட்டது.

படத் தயாரிப்பாளர்களை நான் கேட்டுக்கொள்வதெல்லாம் தயவு செய்து நாட்டைப் பற்றியும் சிந்தியுங்கள் என்பது தான்,

நீங்கள் எடுக்கும் முடிவு எதுவாக இருந்தாலும் ஒன்றுபட்டு இருக்கவேண்டும். மக்கள் உங்கள் பின்னால் இருக்கவேண்டும்.

சினிமா உலகம் என்றாலே எல்லோரும் வசதியாக இருப்பார்கள் என்ற எண்ணம் எப்படியோ இருக்கிறது.

அந்த தவறான எண்ணத்தைப் போக்கும் வகையில் எளிமையாக இருக்கவேண்டும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

விழாவிற்கு வருகை தந்தவர்களை வித்வான் லட்சுமணன் வரவேற்றார்.

'எங்கள் வாழ்வும், எங்கள் வளமும் மக்கள் திலகம் பொன்மனச் செம்மல், புரட்சித்தலைவர் என்று சங்கே முழங்கு' என்று கூறி முடித்தார்,

திரையுலகினர் திரளாக கலந்துகொண்டனர்

ரிஷிகேஷ் முகர்ஜி தாசரி நாராயணராவ் முதலியோர் ஆகியோர் பேசினர்.

மணியன் நன்றி கூறினார் தலைவர்களுக்கு மாலை அணிவிக்கப்பட்டது.

புதிய 'பஸ்ரூட்' துவக்கவிழா

# அமைச்சர் பஸ் ஓட்டினார்-எம். எல். ஏ. டிக்கெட் தந்தார்

கோபி, ஜூலை 14-கோபி பேருந்து நிலையத்திலிருந்து நம்பியூர் செல்லும் புதிய பஸ்ரூட்டை பவானி சட்டமன்ற உறுப்பினர் வி கே சுப்பிரமணியம் டிக்கெட் வழங்க போக்குவரத்துத் துறை அமைச்சர் முத்துசாமி தானே 3 கிலோ மீட்டர் தூரம் ஓட்டிச் சென்று துவக்கி வைத்தார்.

கோபி பேருந்து நிலையத்தில் புதிய பஸ் ரூட் துவக்க விழாவில் போக்குவரத்துத் துறை அமைச்சர் முத்துசாமி கலந்து கொண்டு ஆறு புதிய பஸ் ரூட்டுகளை துவக்கி வைத்தார்.

கோபி பேருந்து நிலையத்திலிருந்து நம்பியூர் செல்லும் பஸ் ரூட்டை அமைச்சர் முத்துசாமி தானே 3 கி. மீட்டர் தூரம் ஓட்டிச் சென்றார் பஸ்ஸில் மாவட்ட ஆட்சித்தலைவர் லஷ்மிரதன் நாடாளுமன்ற உறுப்பினர் கே. சி. சின்னசாமி, சட்டமன்ற உறுப்பினர்கள் கே. ஏ. செங்கோட்டையன். பி. ஜி. நாராயணன், ஆர் ரங்கசாமி, மற்றும் காடுவெட்டி கண்ணப்பன் ஆகியோர் பயணம்செய்ய பவானி சட்டமன்ற உறுப்பினர் வி கே சுப்பிரமணியம் அனைவருக்கும் டிக்கட் வழங்க துவக்க விழா நடைபெற்றது.

மற்றும் ஈரோடில் நடைபெற்ற வேளாளர் மகளிர் பள்ளியை மேல் நிலைப் பள்ளியாக மாற்றும் விழாவில் அமைச்சர் முத்துசாமி கலந்துகொண்டு உரையாற்றினர். அவ்விழாவிற்கு மாவட்ட ஆட்சித்தலைவர் லஷ்மிரதன் தலைமை வகித்தார்.

இதற்கு முன்பாக அமைச்சர் ஈரோடில் மறைந்த கழகத் தோழர்கள் இல்லத்திற்குச் சென்று ஆறுதல் கூறினர்.

பின்னர் காவேரி வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களைசென்றுசந்தித்தார் அவர்களுக்கு தேவையானவற்றை உடனடியாக கொடுக்கும்படி சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு உத்தரவிட்டார்.

மற்றும் அங்கு நடந்த கழகத் தோழர்கள் சின்னராஜி, ராஜம்மாள் திருமணத்தில் அமைச்சர் கலந்துகொண்டார்.

அங்கிருந்து அமைச்சர் சேலத்திற்கு ரயில்மூலம் சென்றார் அங்கு ரயில் நிலயத்தில் அமைச்சர் முத்துசாமிக்கு மேளதாளத்துடன் வரவேற்பு அளிக்கப்பட்டது.

ரயில் நிலயத்தில் அமைச்சரை மாவட்ட அமைப்பாளர் முத்து, கண்ணன், சட்டமன்ற உறுப்பினர்கள் தனபால், சிவபெருமாள், செம்மலை கிருஷ்ணராஜ், விஜயலக்ஷ்மி மற்றும் ராஜன், பழனிசாமி, ரகுமான், அங்கமுத்து, சொக்கலிங்கம், சந்திரன் மற்றும் கழகத் தோழர்கள் ஆகியோர் வரவேற்றனர்.

அங்கு நடைபெற்ற தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரிய பொறியாளர்கள் சங்க சார்பில் நடந்த பாராட்டு விழாவில் அமைச்சர் கலந்துகொண்டார் பின்பு அங்கு நடந்த கழக பொது கூட்டத்தில் கலந்துகொண்டு அமைச்சர் முத்துசாமி பேசினர்.

## கச்சா பிலிம் விலை உயர்வு:

# புரட்சி தலைவர் நடவடிக்கை

## டெல்லியில் நிதியமைச்சருடன் முதல்வர் பேச்சு நடத்துகிறார்

சென்னை, ஜூலை 14-கச்சாபிலிம் உயர்வினால் திரைப்படத் தயாரிப்பாளர்களுக்கு 40 சதவிகிதம் செலவு அதிகரிப்பதால் ஏற்படும் பாதிப்புகள் குறித்து டெல்லியில் இம்மாத இறுதியில் நடைபெறும் முதல்வர் மாநாட்டில் கலந்து கொள்ளச் செல்லும்போது மத்திய நிதியமைச்சருடன் பேச்சு வார்த்தை நடத்துவேன் என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினர்.

போட்டோ பிலிம் நிறுவனத்தை அழைத்துப் பேசியுள்ளதாகவும் முதல்வர் புரட்சித் தலைவர் கூறினர்.

இன்று (திங்கள்) காலையில் ஜெமினி ஸ்டுடியோவில் உதயம்புரொடக்ஷன்ஸ் மணியன் பிலிம்ஸ் சார்பில் தயாரிக்கப்படும் 'சுவர்கம்' 'சீதாலு' என்ற இரு படங்களின் துவக்க விழா நடைபெற்றது.

முதல்வர் புரட்சித்தலைவர் கேமராவை முடுக்கி இரு படங்களின் படப்பிடிப்பைத் துவக்கி வைத்தார். அமைச்சர் ஆர் எம் வீ விளக்கேற்றி வைத்தார்.

'சுவர்கம்' படத்திற்கு இந்திப்பட டைரக்டர் ரிஷிகேஷ் முகர்ஜியும், சீதாலுபடத்திற்கு டைரக்டர் தாசரி நாராயணராவும் கிளாப் அடித்தனர்

### ஆர். எம். வீ.

விழாவில் கலந்து கொண்டு அமைச்சர் ஆர். எம். வீ. பேசும்போது கூறியதாவது:

"இங்கே இருபடங்களுக்கு துவக்க விழா நடைபெறுகின்ற இந்த வேளையில் இந்து பிலிம் நிறுவனத்தின் வாசலில் திரைப்படத் தயாரிப்பாளர்களும் கலையுலகினரும் மறியல் செய்து வருகின்றனர்.

இதற்குக் காரணம் கச்சாபிலிம் 40சதவிகிதம் விலை உயர்ந்துள்ளது. சாதாரணமாக ஒரு தயாரிப்பாளர் தனது ஒரு படத்திற்கு ரூ. ஒன்னேகால் லட்சத்திலிருந்து ரூ. ஒன்னரை லட்சம்வரை கூடுதலாக செலவு செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது.

தயாரிப்புச் செலவைக் குறைக்க வேண்டும் என்று கருதும் நேரத்தில் இப்படி கச்சா பிலிம் விலையை உயர்த்தியிருப்பது மிகவும் வருந்தத்தக்கது.

இந்தியாவிலேயே அதிகமாக படங்கள் தயாரிக்கப்படுவது தென்னகத்தில் தான்-நான்கு மொழிகளில் தான்!

பொன் முட்டையிடும் வாத்தாக நினைத்துக் கொண்டு அதன் உயிருக்கே உலைவைக்கும்வகையில் தென்னகத்தைச் சேர்ந்த நான்கு மாநிலங்களில் மட்டும் ரூ 4 அல்லது ரூ 5 கோடி பெற்றிட நினைப்பது என்ன நியாயம்?

படத் தயாரிப்புச் செலவு குறைக்கப்பட்டு திரைப்படத்துறை வளர்ச்சி பெறும் நிலையில் எங்கேயோ எப்படியோ பணத்தை எடுத்துக் கொண்டால் மாநில அரசுக்கு வரும் கேளிக்கை வரி குறையாதா?

திரைப்படங்கள் தயாரிப்பது குறைந்து, வினியோகிப்பது குறைந்து இந்தத் துறை நசிந்து போனால் பாதிக்கப்படுவது மாநில அரசுதான்.

மாநில அரசுக்கு வரும் கேளிக்கை வரியை மறைமுகமாக எடுக்கும் முயற்சியோ என்று சந்தேகப்படும் வகையில் உள்ளது.

வாய்க்காலில் வரும் தண்ணீரைத் திருப்பிவிட்டால் வயலுக்கு எப்படி தண்ணீர் வரும்?

இதனைத் தெரிந்து செய்தார்களோ - தெரியாமல் செய்தார்களோ - தவறு நடந்திருக்கிறது அது நீக்கப்பட வேண்டும்,

முதல்வர் அவர்கள் இங்கு இருப்பதால் இதனை தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ கூறினர்.

### புரட்சித்தலைவர்

முதல்வர் புரட்சித் தலைவர் கூறியதாவது:

"இங்கே அமைச்சர் ஆர். எம். வீ பேசும்போது கச்சாபிலிம் உயர்வைப் பற்றிக் கூறினார்.

இந்து போட்டோ பிலிம் நிறுவனத்தை அழைத்துப் பேசிவிட்டேன்.

இம்மாத இறுதியில் டெல்லியில் நடைபெறும் முதலமைச்சர்கள் மாநாட்டில் கலந்து கொள்ளச் செல்லும்போது மத்திய நிதியமைச்சருடன் இது குறித்து கட்டாயம் பேசுவேன்.

(பலத்த கைதட்டல்)

இந்தப் பிரச்னை குறித்து பேசுவேன் என்றுதான் கூறினேன். முடிவு எடுக்க வேண்டியது அவர்கள் தான்.

இந்து போட்டோ பிலிம் நிறுவனத்தின் முன்பு போராட்டம் நடப்பதாக இங்கே குறிப்பிட்டார்கள்.

போராட்டம் என்ற கட்டத்திற்குப் போவதற்கு முன்பு பிரதிநிதிகள் இதுகுறித்து சம்பந்தப்பட்டவர்களுடன் தொடர்ந்து பேச்சு வார்த்தை நடத்தவேண்டும். விவாதிக்கவேண்டும்.

தயாரிப்பாளர்கள், வினியோகஸ்தர்கள், திரையரங்கு உரிமையாளர்கள், கலைத்துறையினர் எல்லாவற்றிலும் மேலாக பொதுமக்கள் ஆதரவையும் பெற்று ஒன்றுபட்டு போராட்டத்தில் ஈடுபட வேண்டும்.

தயாரிப்பாளர்கள் ஓரளவு வசதியோடு இருப்

(1- பக்கம் பார்க்க)

# தி. மு. க., இ. காங்கிரசார் 80 பேர் ஹண்டே முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்

அச்சிறுப்பாக்கம், ஜூலை 14-திமுக, இந்திரா காங்கிரசார் 80 பேர் அந்த கட்சிகளிலிருந்து விலகி, அமைச்சர் ஹண்டே முன்னிலையில் கழகத்தில் சேர்ந்தனர்.

அச்சிறுபாக்கத்தில் தொகுதி அமைப்பாளர் பாக்கூர் சுப்பிரமணியம் தலைமையில் கழக பொதுக் கூட்டம் நடந்தது.

மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் டாக்டர் ஹண்டே அச்சிறுப்பாக்கம் எம். எல். ஏ. கணேசன், மதுராந்தகம் எம். எல். ஏ. உக்கம்சந்த், காஞ்சிபுரம் வெங்கடசுப்பிரமணியம் காஞ்சி பன்னீர் செல்வம் மற்றும் பலர் பேசினார்கள்.

பொதுக் கூட்ட மேடையில் இ காங்கிரஸ் திமுக ஆகிய கட்சிகளிலிருந்து 80 பேர் விலகி ஹண்டே முன்னிலையில் கழகத்தில் சேர்ந்தனர் டாக்டர் ஹண்டேக்கு அவர்கள் மாலை அணிவித்தனர். அவர்களை கட்டித் தழுவி ஹண்டே வரவேற்றார். தி. மு. க. விலிருந்து விலகிய பிரமுகர்கள் வருமாறு:

ஜி. பழக்கடை பாண்டியன் (அச்சிறுபாக்கம்), என் நாராயணசாமி, சாகுல் (வஜ்ஜிராபுரம் திமுக அவைத்தலைவர்)

இ. காங்கிரசிலிருந்து விலகிய பிரமுகர்கள் வருமாறு:

சுப்பராயன் (நகர இ காங்கிரஸ் தலைவர்) ஆர். சச்சிதானந்தம் (இ. காங்கிரஸ் துணைத்தலைவர்) டாக்டர் சுந்தரமூர்த்தி (நகர இ. காங்கிரஸ் செயலாளர்), பி. ராமலிங்கம் (உதவிச் செயலாளர்), சிவாஜி மன்றத் தலைவர் பி. மோகன்ராஜ். மன்ற செயலாளர் ஜெயகிருஷ்ணன் உதவி செயலாளர் சண்முகம், மதுராந்தகம் தாலுகா விவசாயிகள் சங்க துணைத்தலைவர் கே. என். எஸ். மதார்ஷா ஆகியோர் உள்ளிட்ட 80 பேர் கழகத்தில் சேர்ந்தனர்.







Published by K. Ravindran on be half of Thangamani Publications, 275, Avvai Shanmugam Salai, Madras-14 and Printed by him at Prind House, 1, First Main Road, United India Colony, Madras-24. Editor: E. PARASURAMAN

சந்தா விவரம்
1 வருடச் சந்தா தொகை ரூ. 130
6 மாதச் சந்தா தொகை ரூ. 65
3 மாதச் சந்தா தொகை ரூ. 32-50
3 மாதத்திற்குக் குறைவான சந்தாத் தொகை ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது
நிர்வாகி:
"அண்ணா"
275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-600 014.

# அண்ணா



தேர்தலை எதிர்த்து

## துரை கோவிந்தராசன் வழக்கு

சென்னை, ஜூலை 14- கடந்த சட்டமன்றத் தேர்தலில் திருவோணம் தொகுதியிலிருந்து போட்டியிட்ட கழக வேட்பாளர் துரை கோவிந்தராசன் 62வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி வாய்ப்பினை இழந்தார் ஓட்டு எண்ணிக்கையில் முறை கேடுகள் நடந்திருப்பதாகவும் எனவே தன்னை எதிர்த்து போட்டியிட்ட இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் சிவஞானம் வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்டது செல்லாது என்று அறிவிக்கக்கோரியும் இன்று உயர் நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்தார்.

வழக்கறிஞர்கள் கே கே வேணுகோபால், சுந்தர ராஜன், சுப்பிரமணியம் ஆகியோர் துரைகோவிந்த ராசனுக்காக ஆஜராகிறார்கள்.

# மதுரை நாளங்காடிக்கு பசும்பொன்தேவர்பெயர்: புரட்சித்தலைவர் சூட்டினார்

மதுரை, ஜூலை 14-மதுரை நாளங்காடிக்கு "பசும்பொன் முத்துராமலிங்கம் நாளங்காடி" என்று புரட்சித் தலைவர் பெயர் சூட்டினார்.

ரூ.8லட்சம் செலவில் மதுரை மாநகராட்சி சார்பில் கட்டப்பட்ட நாளங்காடி திறப்புவிழா நடந்தது மதுரை மேயர் முத்து தலைமை வகித்தார் மாநகராட்சி அதிகாரிமலைச்சாமி வரவேற்புரை நிகழ்த்தினார் சாம்ராஜ் அறிக்கை வாசித்தார்.

அமைச்சர்கள்பண்ருட்டி ராமச்சந்திரன், காளி முத்து ஆகியோர் பேசினார்கள்.

## கொத்தனார் திறந்து வைத்தார்

கட்டிடத்தை கட்டிய கொத்தனார் பாண்டி, நாளங்காடியைத் திறந்து வைத்தார்.

முதல்வர் புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது:

மதுரைநகருக்கும் எனக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு, 7 வயதில் நான் ஒரிஜினல் பாய்ஸ்கம்பெனியில்சேர்ந்துஇங்குபணிபுரிந்தேன். எனக்கு அதில் சேர வாய்ப்புத் தந்தவர் சச்சிதானந்தம் பிள்ளை. அவர் ஆதரவு தந்திராவிட்டால் என் நிலைமை என்ன ஆகியிருக்கும் என்று தெரியாது. அப்படிப்பட்ட நல்லவரை வணங்குகிறேன்.

இப்படி நீண்ட நாட்களாக இந்த ஊருக்கும் எனக்கும் தொடர்பு உண்டு.

இந்த நாளங்காடியில் சுத்தமான பொருள்களை வைத்து விற்கவேண்டும் என்று கேட்டுகொள்கிறேன். தின்பண்டங்கள் விற்பனை செய்பவர்கள் நன்றாக மூடி சுகாதார முறைப்படி வைத்து விற்கவேண்டும்.

இந்த மார்க்கெட்டுக்கு பசும்பொன் முத்துராமலிங்கம் நாளங்காடி என்று பெயர் வைக்குமாறு மேயரைக் கேட்டுக்கொள்கிறேன்.

கலப்படத்தை ஒழித்து மக்களுக்குத் தரமான பொருள்களை கிடைக்கச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு புரட்சித் தலைவர் கூறினார்.

துணைமேயர் சந்தானம் நன்றி கூறினார்.

## எம். எஸ். கச்சேரி

உப்புச் சத்தியாக்கிரக பொன்விழா கட்டிட நிதிக்காக ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி தலைமையில் எம். எஸ் சுப்புலட்சுமி பாட்டுக் கச்சேரி நடந்தது ஜி. ராமச்சந்திரன் வரவேற்றுப் பேசினார்.

நா மகாலிங்கம் சிறப்பு மலரை வெளியிட்டார்.

இந்த நிகழ்ச்சிக்கு முதல்வர் புரட்சித்தலைவர் வந்தார். நாலுமணி நேரம் நிகழ்ச்சியைக் கேட்டார். பின்னர் பாராட்டிப் பேசினார்.

அமைந்தகரையில்

## வாக்காளர்கட்கு நன்றி அறிவிப்பு பொதுக் கூட்டம்

சென்னை, ஜூலை. 14- அமைச்சர் ஹண்டேவுக்குப் பாராட்டு-வாக்காளர்களுக்கு நன்றியறிவிப்பு பொதுக் கூட்டம் நாளை (15ந் தேதி) மாலை 7 மணிக்கு அமைந்தகரை பெருமாள் கோவில் தெருவில் நடக்கிறது.

இரா நந்தகோபால் தலைமை வகிக்கிறார். அமைச்சர் ஹண்டே, ஜி கே சுப்பிரமணியம் எம் எல் ஏ, கண்ணப்பன் எம் எல் சி, வ கோதண்டராமன், நா துவாரகாநாதன், சி வரதராசன், ஜேவி, கு. அல்போன்ஸ், கருணாகரன், டி டி லட்சுமணன், சத்தியநாராயணன் ஆகியோர் கலந்துகொண்டு பேசுகின்றனர்.

மாநில விவகாரங்களில் தலையிடுவதா?

# மத்திய மந்திரிகள்மீது சென்னா ரெட்டி பகிரங்க குற்றச்சாட்டு

ஐதராபாத், ஜூலை. 14- மாநில விவகாரங்களில் மத்திய அமைச்சர்கள் தலையிடுவதைக் கண்டித்து ஆந்திர முதல்வர் சென்னாரெட்டி பேசினார்.

ஆந்திரமுதல்வர்சென்னா ரெட்டியை பதவியிலிருந்து நீக்க போட்டி கோஷ்டியினர் வரிந்து கட்டி வேலை செய்துவருவது தெரிந்ததே மாநில அமைச்சர்கள் சிலரும் சென்னாரெட்டியை எதிர்க்கிறார்கள்.

சென்னாரெட்டி மீது நம்பிக்கை இல்லை என்று கையெழுத்து வேட்டை நடத்திய எம் எல் ஏக்கள். அந்த மனுவை டெல்லி சென்று இ காங்கிரஸ் மேலிடத்திடம் கொடுத்து விட்டுத் திரும்பியுள்ளனர்

இதற்கிடையில் கர்னாடக முதல்வர் குண்டுராவ், ஆந்திர முதல்வர் சென்னாரெட்டியைச் சந்தித்து பத்துநிமிட நேரம் பேசிக்கொண்டிருந்தார்.

டெல்லி மேலிடம் அனுப்பிய செய்தியை சென்னாரெட்டியிடம், குண்டுராவ் கூறியதாகத் தெரிகிறது.

டெல்லிக்கு வருமாறு சென்னாரெட்டியை காங்கிரஸ் மேலிடம் அழைத்திருப்பதாகத்தெரிகிறது.

இதற்கிடையில் சென்னா ரெட்டிக்கு எதிராக மத்திய அமைச்சர்கள் 4 பேர் செயல்படுவதாக சென்னா ரெட்டி ஆதரவாளர்கள் கூறினார்கள்.

மத்திய அமைச்சர்கள் மாநிலங்களில் நடைபெறும் கோஷ்டி சண்டைகளில் தம்மை ஈடுபடுத்திக் கொள்ளக்கூடாது, மத்திய அமைச்சர்கள் மாநில பிரச்னைகளில் தலையிடுவதால் குழப்பம்தான் மிஞ்சும் என்றுசென்னாரெட்டி கூறினார், குழப்பம்செய்யும்மத்திய அமைச்சர்கள் காங்கிரஸ் மேலிடத்தின் கருத்துப்படி செயல்படுவதாக கூறுவது உண்மை அல்ல. என்னை எதிர்க்கும் சில எம். எல்: ஏக்களும் இந்திரா தங்களை ஆதரிப்பதாகக் கூறுகிறார்கள், இதுவும் பொய்யாகும், அனாவசியமாக இந்திராகாந்தியின் பெயரை இந்தப் பிரச்சினையில் இழுப்பது தேவையற்றது என்று சென்னா ரெட்டி கூறினார்.

## தி. நகரில் கே. ஏ. கே.- எஸ். என். ஆர் பேசுகிறார்கள்

சென்னை, ஜூலை 13- தியாகராயநகர் பஸ்நிலையம் அருகில் 16ந்தேதி மாலை 7 மணிக்கு பொதுக் கூட்டம் நடக்கிறது.

கே. ஆறுமுகம் தலைமை வகிக்க ஜி. ரவி குமார் முன்னிலை வகிப்பார். கே. சாமிநாதன் வரவேற்றுப் பேசுவார்,

அமைச்சர்கள் கே ஏ கே எஸ் என் ராஜேந்திரன், மற்றும் டாக்டர் சமரசம் எம் எல் ஏ ஜே பாலன், கு க செல்வம் சா கோவிந்சாமி, தி நகர் மூர்த்தி, எஸ் சண்முகம் செங்கைமணி மாறன் மற்றும் பலர் பேசுகிறார்கள் எஸ் ராஜேந்திரன் நன்றி கூறுவார்.



கிருத்துவ ஜனநாயக முன்னணி பாராட்டு

## மக்கள் குறை தீர்க்கும் பட்ஜெட்

திருப்பத்தூர், ஜூலை 14- வட ஆற்காடு மாவட்டம் திருப்பத்தூரில் கிருத்துவ ஜனநாயக முன்னணி (தமிழ்நாடு) மாநில செயற்குழுக் கூட்டம் நடந்தது.

கூட்டத்தில் கட்சியின் செயலாளராக அ பன்னீர் செல்வம் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

தமிழக பட்ஜெட்டில் ஏழை மக்கள் குறைதீர்க்க கொண்டு வரப்பட்டுள்ள திட்டங்கள் அனைத்தையும் வரவேற்று கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

# அரிஜன மாணவர் விடுதிகளில்அமைச்சர் விஜயசாரதி சோதனை

## விடுதி பொறுப்பாளர்கள் இருவர் தற்காலிக வேலைநீக்கம்

கோவை, ஜூலை. 14- தமிழ்நாடு அரிசன நலத்துறை அமைச்சர் விஜயசாரதி அரிஜன மாணவர் விடுதிகளில் திடீர் சோதனை நடத்தினார் இச்சோதனைகளை அடுத்து விடுதிப் பொறுப்பாளர்கள் இருவர் தற்காலிக வேலை நீக்கம் செய்யப்பட்டனர்.

கோவை நகரில் உள்ள இரண்டு அரிசன மாணவர் விடுதிகளுக்கு அரிசன நலத்துறை அமைச்சர் விஜயசாரதி திடீரென சென்று சோதனை நடத்தினார்.

விடுதிகளில்இருந்தமாணவர்களிடம் குறைகள் ஏதேனும் உள்ளதாஎன அமைச்சர் விஜயசாரதிகேட்டறிந்தார்.

அமைச்சர் சென்றிருந்தபோது இந்த இரண்டு மாணவர் விடுதிகளிலும் விடுதி பொறுப்பாளர்கள் இல்லை.

ஒரு விடுதியில் தண்ணீர் மற்றும் விளக்கு வசதிகள் போதுமானவையாக இல்லை.

மேற்கண்ட இரண்டு விடுதிகளின் பொறுப்பாளர்களையும் தற்காலிக வேலை நீக்கம் செய்யும்படி அமைச்சர் விஜயசாரதி உத்தரவிட்டார்.



# பெரியார் பெயரில் அறிவியல் அருங்காட்சியகம்: ஏற்பாடு தீவிரம்

சென்னை, ஜூலை. 14- பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியார் பெயரில் அறிவியல் அருங்காட்சியகம் ஒன்று அடையாறில் அமைக்கும் வேலை நடைபெற்று வருகிறது. இதற்காக 10ஏக்கர் நிலம் அடையாறு பாலிடெக்னிக் வளாகத்தில் ஒதுக்கப்பட்டு இருக்கிறது என்று கல்வி அமைச்சர் அரங்கநாயகம் சட்டப்பேரவையில் அறிவித்தார்.

கல்வி மானிய விவாதத்திற்கு கல்வி அமைச்சர் அரங்கநாயகம் பதில் அளித்த போது இது பற்றிய தகவலை வெளியிட்டார்.

இந்த வேலையைக் கவனிக்க தனி அதிகாரி ஒருவர் நியமிக்கப்பட்டுள்ளார் என்றும் அமைச்சர் தெரிவித்தார்.

அமைச்சர் அரங்கநாயகம் கூறியதாவது:-

சென்னையில் தந்தை பெரியார் பெயரில் அறிவியல் அருங்காட்சியகம் ஒன்றை ஆரம்பிப்பதற்கான முன்னோடி வேலைகள் நடைபெற்று வருகின்றன.

இதற்காக 10 ஏக்கர் நிலம் அடையார் பாலிடெக்னிக் வளாகத்தில் ஒதுக்கப்பட்டு இதன் வேலைகளை கவனிக்க ஒரு தனி அலுவலரும் நியமிக்கப்பட்டுள்ளார்.

இவ்வாண்டு மதுரையில் ரூ 1.75 லட்சம் செலவில் ஒரு அருங்காட்சியகம் அமைக்கப்பட இருக்கிறது.

தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா ஆகியோர் பற்றியும், சைவ சித்தாந்தத்தைப் பற்றியும் ஆராய்ச்சிப் பணியிடங்களை சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஏற்படுத்த தேவைப்படும் மானியம் வழங்க இருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.